Regd. No. 2975

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் - 349

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.



# SRI RAMANUJAN

Editor:

*Mahamahimopadhyaya*

P. B. ANNANGARACHARYA, KANCHIPURAM–631503.



வருஷச் சந்தா 10 ரூ. ஜீவியச் சந்தா ரூ. 25



பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்.





ஆழ்வார்களும் வாழி அருளிச்செயல் வாழி
தாழ்வாதுமில் குரவர் தாம்வாழி—ஏழ்பாரும்
உய்ய அவர்கள் உரைத்தவைகள் தாம்வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

பிங்கள ௵ 10—7—1977

## திருநாங்கூர் வண்புருடோத்தமம் ஸன்னிதி ஸம்ப்ரோக்ஷணம்

(ஸ்ரீ உ. வே. *திருநாங்கூர்* P. B. K. *ஸ்ரீநிவாஸாசாரியர்*, சிரோமணி வித்வான்.)

திருநாங்கூரில் வண்புருடோத்தம திவ்யதேசம் ஜீர்ணமாயிருந்ததை உத்தாரணம் செய்து திருப்பணி பூர்த்தியாகி மஹா ஸம்ப்ரோக்ஷணம் நிகழும் பிங்கள வருஷம் ஆனிமாதம் 12-ந் தேதி ஞாயிற்றுக்கிழமை (26—6—77) காலை வெகு விமரிசையாக நடைபெற்றது. ஸம்ப்ரோக்ஷணாங்கமாக 22-6-77 புதன் மாலை அநுஜ்ஞை ம்ருத்ஸங்க்ரஹணம் வாஸ்துசாந்தி நடைபெற்றது. கர்ப்பக்ருஹத்தில் (மூலஸ்தானத்தில்) ருக்யஜுஸ்ஸாமாதர்வண வேதங்கள் ஸ்ரீ ராமாயண பாரத ஸ்ரீ விஷ்ணுபுராணங்கள் ஸ்ரீபாஷ்யம் திவ்யப்ரபந்தம் இவை தொடங்கப்பட்டது. 23—6—77 வியாழன் காலை வண்புருடோத்தமன் யாகசாலைக்கு எழுந்தருளி, யாகசாலை கார்யங்கள் ஆரம்பமாயின. காலை மாலை இருவேளைகளிலும் பூர்ணாஹுதி ஸேவை சாற்றுமுறை நடைபெற்றது. 23—6—77 மாலை 4 மணிக்கு ஸ்ரீ உ. வே. வித்வான் வித்யாபூஷணம் ப்ருந்தாவனம் ஸ்ரீரங்கஜீ மந்திரம் ஆஸ்தான வித்வான் திருநாங்கூர் ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமியின் ஆத்யக்ஷ்யத்தில் உபந்யாஸம் நடைபெற்றது. ஸ்ரீ உ. வே. வித்வான் ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம் ஆசிரியர் புத்தூர் S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமியும், ஸ்ரீ உ. வே. வித்வான் திருமலை அனந்தாண்பிள்ளை சதாபிஷேகம் கோவிந்த நரஸிம்ஹாசார்ய ஸ்வாமியும் உபந்யஸித்தனர், எல்லா உபந்யாஸங்களும் புருடோத்தம பரத்வ விஷயமாயே அமைந்தன. 24-6-77 ஸ்ரீ உ. வே. வித்வான் ஸலக்ஷண கனபாடி திருக்கண்ணபுரம் சௌரிராஜய்யங்கார் ஸ்வாமி தாம் அச்சிட்ட சிறுபுலியூர் ஸ்வாமி வாதித்த 'ஸதநுஷ்டான தர்ப்பணம்' என்னும் க்ரந்தத்தை வெளியிட்டு அதன் விஷயத்தை உபந்யஸித்தார்.

25—6—77 சனி மாலை 5-30 மணி முதல் 7-30 மணி வரை ஸ்ரீ உ. வே. வித்வான் ஸ்ரீராமாநுஜ மிஷன் பொதுச் செயலாளர் திருநாங்கூர் ப்ரதிவாதி பயங்கரம் ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமியும், ஸ்ரீ உ. வே. வித்வான் வாகம்ருதவர்ஷி வேளுக்குடி K. வரதாசார்ய ஸ்வாமியும், ஸ்ரீ உ. வே. வித்வான் ஸ்ரீ வில்லிபுத்தூர் விஞ்சிமூர் ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமியும் ஸ்ரீ உ. வே. வித்வான் தினமணி ஆசிரியர் குமாரவாடி ராமாநுஜய்யங்கார் ஸ்வாமியும் உபந்யஸித்தனர் 26—6—77 காலை 9 மணிக்கு வண்புருடோத்தமன் யாகசாலையிலிருந்து புறப்பட்டு கண்டருளி பெருமாள் தாயார் ஸ்ரீராமன் ஸன்னிதி விமான ஸம்ப்ரோக்ஷணமாகி கர்ப்பக்ருஹத்துக்கு எழுந்தருளினார். மூலஸ்தானத்தில் வேத இதிஹாஸ புராண ஸ்ரீபாஷ்ய திவ்யப்ரபந்த சாற்றுமுறை நடைபெற்று தீர்த்த விநியோக கோஷ்டி நடைபெற்றது. ஸ்ரீ உ. வே வித்வான் ஜகத்குரு காதி கிருஷ்ணமாசார்ய ஸ்வாமி திருக்குமாரரோடு எழுந்தருளி கோஷ்டியை அலங்கரித்தருளினார் பாராயணங்களில் அந்வயித்த ஸ்வாமிகளுக்கு ஸம்பாவனை ஸ்ரீ காதிஸ்வாமி திருக்கைகளினாலே ஸமர்ப்பிக்கப்பட்டது. இரவு பெரிய திருவடி வாஹனப் புறப்பாடுடனும் ஹரிகதா காலக்ஷேப—ஸங்கீதக் கச்சேரிகளுடன் ஸமாப்தமாயிற்று.

ஸ்ரீ ராமாநுஜன் 349



ஆசிரியர்:
மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீகாஞ்சி ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர்

தொகுதி 30 | பிங்களஸூ ஆனிமீ 10—7—1977 | பகுதி—1

# ஸ்ரீராமாநுஜனுக்குப் புத்தாண்டு பிறப்பு

அன்பர்களே!, நமது ஸ்ரீராமாநுஜன் இருபத்தொன்பது பிராயங்களைக்கடந்து முப்பதாவது பிராயத்தில் இனிதுஅடிவைக்கின்றதின்று. அன்பர்களனைவருடையவும் ஆசியைக் கோருகின்றது. ஸ்ரீராமாநுஜனுதான் ஆசார்ய ஸார்வபௌமரான ஸ்வாமி யெம்பெருமானாரை ஒரு சுலோகத்தினாலும் ஒருசெய்யுளினாலும் வாழ்த்துகின்றது.

சுலோகம் வருமாறு:

ஸ்வாமிந்! யதீந்த்ர! பவதீயக்ருபாகடாக்ஷபூர்ண சராமி புவநே ஸு ஸுகம் ஸமேதம்,
ஏவம் ஸதாம் பரிஸரேஷு சிரம் விஹர்த்தும் பாக்யம் லபேய பவதீயக்ருபாகடாக்ஷாத்.

(இதன்பொருள்.) ஸ்வாமி யெம்பெருமானாரே! தேவரீருடைய கருணைகடாக்ஷவைபவத்தினால் இவ்வுலகிலெங்கும் இதுகாறும் இனிது ஸஞ்சரித்துவருவதுபோலவே மேலும் நெடுநாளளவவும் ஸத்துக்களுள்ள விடங்களிலே ஸஞ்சரிக்க தேவரீரைச் சேர்ந்தவர்களின் அருள்நோக்கால் பாக்கியம் பெறுவேனாக. ... ... ... *

(செய்புள்—வெண்பா.)

எந்தை யெதிராசா! இன்றளவு முன்னருளால்
இந்த நிலத்தெங்கு மெல்லார்க்கும்—சிந்தைதனில்
தேனூறி யெப்பொழுதும் தித்திக்கவே நின்றேன்
நாளைநு மிங்ஙனமே நல்கு. —என்பதாம்.

(இதன்பொருள்.) ஸ்வாமிந்! எம்பெருமானாரே! நான் தோன்றினபின் கடந்த இருபத்தொன்பது பிராயமளவும் தேவரீர்திருவருளால் இந்நிலவுலகத் தெங்குமுள்ள எல்லார்க்கும் நெஞ்சில் எப்போதும் தேனூறித் தித்திக்கும்படி இருந்துவருகிறேன்; மேலுள்ள காலமெல்லாம் இப்படியேயிருந்து வரும்படி திருவுள்ளம் பற்றவேணும்.(என்று ஸ்ரீராமாநுஜன் பத்திரிகை பிரார்த்திக்கிறபடி.) ... ... ... *

மங்களகரமான பிங்கள ஸம்வத்ஸரத்தில் இன்னமும் ஒன்பது மாதங்களுக்கு மேல் ஶேஷித்திருப்பதால் எம்பெருமானருடைய திவ்யஸூக்திப் பெருமைகளையும் தொடர்ந்து அநுபவிக்க விரும்புகின்றோம். வடமொழி வல்லுநர்க்கும் த்ருப்திகரமாம்படி **விசிஷ்டாத்வைதசந்த்ரிகா** என்கிற ஸம்ஸ்க்ருதக்ரந்தமொன்றையெழுதி இன்று வெளியிட்டிருக்கிறோம். எளியவசன நடையிலேயேயுள்ளது.தேவநாகரலிபியில்அச்சிடப்பட்டுள்ளது. நமது ஸம்ஸ்க்ருத பத்ரிகையான வைதிக மநோஹராமூலமாக இது வெளிவருவதனால் அப்பத்ரிகை பெறுமவர்களுக்கு இது கிடைத்தே தீரும். ... ... ●

## ஆனிமாதத்திற்காகப் பெரியாழ்வாரைச் சிந்திப்போம்.

*ஆனிதன்னிற் சோதிநன்னாளவதரித்த பெரியாழ்வாரைச் சிந்திக்கும் வகைகள் பலவுண்டு; அவற்றில் ஒருவகை—மற்றுள்ளவாழ்வார்களொருவரும் அருளிச்செய்யாமல் இவரொருவர் மட்டும் அருளிச்செய்தவையான இதிஹாஸங்களைச் சிந்திப்பதாம்.

ஆழ்வார்களில் ஒரு திவ்யப்ரபந்தமருளிச்செய்தவர்கள் ஐவர்; முதலாழ்வார்கள் மூவரும், குலசேகராழ்வாரும் திருப்பாணாழ்வாரும்.

இரண்டு திவ்யப்ரபந்தங்களருளிச் செய்தவர்கள் மூவர்;—

நான்முகன் திருவந்தாதியும் திருச்சந்தவிருத்தமுமருளியவர்—திருமழிசையாழ்வார்.
திருப்பல்லாண்டும் திருமொழியுமருளிச்செய்தவர்—பெரியாழ்வார்.
திருமாலையும் திருப்பள்ளியெழுச்சியு மருளிச்செய்தவர்—தொண்டரடிப்பொடியாழ்வார்.

நான்கு திவ்யப்ரபந்தங்களருளிச் செய்தவர்—நம்மாழ்வார்.

ஆறு திவ்யப்ரபந்தங்களருளிச்செய்தவர்—திருமங்கையாழ்வார்.

பெரியாழ்வாருடைய ப்ரஶம்ஸையே இப்போது ப்ராப்தமாதலால் அவருடைய இரண்டு திவ்யப்ரபந்தங்களுள் முதலதான திருப்பல்லாண்டில் சில விசேஷக்குறிப்புகள் கேளீர்; **பல்லாண்டு** என்கிறவாசகம் நம்மாழ்வாருடைய திருவாக்கில் (திருவாய்மொழி 7–3–11) *மிக்கவோராயிரத்துள் இவைபத்தும் வல்லார்களைத், தொக்குப் **பல்லாண்டிசைத்துக்** கவரிசெய்வ ரேழையரே* என்றவிடத்தும், திருமங்கையாழ்வாருடைய திருவாக்கில் (பெரியதிருமொழி — 6–2–5.) *பாண்டேன் வண்டறைபுங் குழலார்கள் பல்லாண்டிசைப்ப* என்றவிடத்திலும் காண்பதாயினும் பல்லாண்டு பாடுவதற்கென்று தனிப் பிரபந்தமிட்டருளினவர் பெரியாழ்வாரொருவரேயாவர். திருப்பல்லாண்டில் இரண்டு விசேஷங்கள் குறிக்கொள்ளத்தக்கன; (1.)*தீயிற்பொலிகின்ற செஞ்சுடராழி திகழ்திருச்சக்கரத்தின், கோயிற்பொறியாலே யொற்றுண்டு நின்று* என்கிற பாசுரத்தினால் தப்தசக்ராங்கனத்தை வ்யக்தமாகப் பேசியிருப்பது. (2) *அல்வழக்கொன்றுமில்லா வணிகோட்டியர்கோன் அபிமானதுங்கன், செல்வனைப்போலத் திருமாலே! நானுமுனக்குப் பழவடியேன்* என்கிற பாசுரத்தினால் ஸமகாலத்திலுள்ளவொரு மஹாநுபாவரை [திருக்கோட்டியூர் செல்வநம்பியைப்] புகழ்ந்து பேசியிருப்பது. மேலே (பெரியாழ்வார்) திருமொழியிலும் திருக்கோட்டியூர்ப் பதிகத்தில்—(4-4-8) *நளிர்ந்த சீலன் நயாசலன் அபிமானதுங்கனை நாடொறும் தெளிந்த செல்வனைச் சேவகங்கொண்ட செங்கண்மால் திருக்கோட்டியூர்* என்னும் பாசுரத்தினால் அந்தச் செல்வநம்பியைப் புகழ்ந்து பேசியிருப்பது காணத்தக்கது. இரண்டிடத்திலும் **அபிமானதுங்கன்** என்கிற

அடைமொழியை யருளிச்செய்திருக்கையாலே இஃது அப்பெரியார்க்கு விருதுநாம மென்று தோன்ற நின்றது.

மஹர்ஷிகளின் கோஷ்டியில் *உபமாநமஶேஷாணாம் ஸாதூநாம் யஸ் ஸதா பவத்* என்னப்பட்ட ப்ரஹ்லாதாழ்வானும், ஆழ்வார்களின் கோஷ்டியில் இச் செல்வ நம்பியும், ஆசாரியர்களின் கோஷ்டியில் கூரத்தாழ்வானும் விஶேஷித்து ப்ரஶம்ஸிக் கப்பெற்றவர்கள்—என்பர் நம் முதலிகள்.

இவ்வாழ்வார்க்குப்பெரியாழ்வாரென்று வழங்கும் திருநாமத்தைப்பற்றி வேதாந்த தேசிகன் கோதாஸ்துதியில் *நாதஸ் து தே மதுபிதஸ் ஸ்துதிலேஶவஶ்யாத் கர்ணாம் ருதஸ்துதிஶதைரநவாப்த பூர்வம், த்வந்மௌளிகந்த ஸுபகாம் உபஹ்ருத்ய மாலாம் லேபே மஹத்தரபதாநுகுணம் ப்ரஸாதம்* என்கிற சுலோகத்தினால் காரணவிஶேஷ மருளிச் செய்துள்ளார். ஆண்டாள் சூடிக்களைந்த மாலையை அரங்கனுக்கு உபஹரித் ததனால் பெரியாழ்வாரென்னும்படியான அநுக்ரஹத்தைப் பெற்றார்—என்பது இந்த சுலோகத்தின்கருத்து. இங்கு மற்றொருவிதமான நிர்வாஹமுமுண்டு; அதனை உபதேச ரத்தினமாலையில் மணவாளமாமுனிகள் அருளிச்செய்துள்ளார்; அதில் *மங்களாசாச னத்தில் மற்றுள்ளவாழ்வார்கள் தங்களார்வத்தளவு தானன்றிப் பொங்கும் பரிவாலே வில்லிபுத்தூர்ப் பட்டர்பிரான் பெற்றான். பெரியாழ்வாரென்னும் பெயர்* என்கிற பாசுரங் காண்க. ஸ்ரீராமாயணத்தில் ஜடாயு மஹாராஜர்க்குப்பெரிய வுடையார் என்று திருநாமம். பெரிய ஸ்வாமியென்று பொருள். எதனால் அவர் பெரியவராயினர்? என்று விசாரம் ப்ராப்தம். இங்கே நம் ஆசாரியர்களின் அருமருந்தன்ன நிர்வாஹம் கேண்மின்; பிராட்டியைப் பிரிந்த பெருமாள் பம்பாநதிக்கரையில் வாசாமகோசரமாக நிர்வேதப்படுவதைக்கண்ட திருவடி (அநுமன்) 'ஸமுத்ர இவ காம்பீர்யே' என்றுபோற் றப்பட்ட இராமன் தன்னுடைய காம்பீர்யத்தையெல்லாமிழந்து ஒரு பெண்பெண்டாட் டிக்காக இப்படி கிலேசப்படுவதே! என்று வெறுத்திருந்தானும்; அவ்வநுமான் தானே இலங்கையிற் சென்று பிராட்டியைக்கண்டவாறே *துஷ்கரம் க்ருதவாந் ராமோ ஹீநோ யத் அநயா ப்ரபு:, தாரயத்யாத்மநோ தேஹம் ந ஶோகேநாவஸீததி* என்றான். 'இப்படிப்பட்ட பிராட்டியைப் பிரிந்து பெருமாள் உடனே உயிர்மாயாதே எப்படி உடலைத் தரித்திருக்கின்றார்! என்று சிந்தை கலங்கி நைகின்றார் திருவடி. பெருமாள் மாயாமைக்குக் காரணம் கண்டு கூறவேணும். மாரீசவதம்பண்ணி மீண்ட பெருமாள் பர்ணசாலையில் பிராட்டியைக் காணாது அங்குமிங்குந் திரிந்து வருந்துகிறபடியைக் கண்ட ஜடாயுமஹாராஜர் *யாமோஷதிமிவாயுஷ்மந்! அந்வேஷஸி மஹாவநே, ஸா தேவீ மம ச ப்ராணா: ராவணேந உபயம் ஹ்ருதம்* என்று நடந்த செய்தியைச் சொன் னார். இந்த *யாமோஷதிமிவ ஸ்ரீமந்! *யாமோஷதிமிவ ஸ்வாமிந்!* என்றாற்போலே ஸம்போதியாதே *ஆயுஷ்மந்!* என்று ஸம்போதித்த ஜடாயு மஹாராஜரின் கருத்து, இந்த வ்யஸநத்தால் பெருமாளுடைய திருமேனிக்கு யாதோர் அவத்யமும் நேரா திருக்கவேணுமென்று ஆஶாஸித்தபடியேயாம். அஸ்தாநே பயஶங்கைதானே மங்களாஶாஸநத்திற்கு ஹேது. இந்த மங்களாஶாஸநத்தாலேயே பெருமாள் *தஶ வர்ஷஸஹஸ்ராணி தஶ வர்ஷஶதாநி ச, ராமோ ராஜ்யமுபாஸித்வா* என்னும்படி யெழுந்தருளியிருந்தது. இப்படி மங்களாஶாஸனம் செய்ததற்காகவே ஜடாயு மஹா ராஜர்க்குப் பெரியவுடையாரென்று திருநாமமாயிற்று. இந்த நிர்வாஹத்தை...

யொற்றியே மணவாளமாமுனிகளின் (கீழே யெடுத்துக்காட்டிய) உபதேசர்த்தின மாலைப் பாசுரமவதரித்ததென்றுணர்க. ... ... ... ... *

இனி இவ்வாழ்வாருடைய இரண்டாவதுப்ரபந்தமான திருமொழியில் இவ்வாழ்வாரால் மட்டும்அநுபவிக்கப்பட்ட இதிஹாஸங்களையும்விசேஷங்களையும்விளக்குவோம். விசேஷப் பாசுரங்களை முன்னம் குறிப்பிட்டு, பின்னை அவற்றிற்கு விவரணம் செய்வோம். *வண்ணமாடங்களென்கிற முதற்பதிகந் தொடங்கி (3-6.) *நாவலம் பெரியதீவினில் வாழுமென்கிற பதிக மளவாக இருநூற்றறுபது பாசுரங்களினால் கண்ணபிரானுடைய பாலலீலைகளைப் (பிள்ளைத் தமிழ் என்னும் முறையில்) அநுபவித்த அதிசயம் பராசர பாராசர்யாதிகளான மஹர்ஷிகளிலும் ஆழ்வார்களிலும் ஒருவர் பக்கலிலும் காணமுடியாதது. *க்ருஷ்ணத்ருஷ்ணாதத்வமென்று விருதுபெற்ற நம்மாழ்வாரும் திருவாய்மொழியில்(5-10)*பிறந்தவாறும்*(6-4.)*குரவையாய்ச்சியரோடு கோத்ததும்*என்கிற இரண்டு பதிகங்களினால் மட்டுமே அநுபவித்த க்ருஷ்ண சேஷ்டிதங்களைப் பரிபூர்ணமாக அநுபவித்தவர் பெரியாழ்வாரொருவரே யன்றோ. ஆண்டாள் தனது திருமொழியில் (7-10.) *போகத்தில் வழுவாத புதுவையர்கோன்* என்று திருத்தகப்பனாரைப் புகழ்ந்து கூறியது இதுபற்றியே யன்றோ. பெரியாழ்வார்போகத்திற்கு வானவர்போகமும் ஈடாகாதென்பர் பெரியோர். *பெருநீர்த் திரையெழு கங்கையிலும் பெரியதோர் தீர்த்தபலம் தருநீர், சிறுச்சண்ணம் துள்ளஞ்சோரத் தளர்நடை நடவானோ* என்றும், *வட்டுநடுவே வளர்கின்ற மாணிக்க மொட்டு நுனையில் முளைக்கின்ற முத்தேபோல், சொட்டுச் சொட்டென்னத் துளிக்கத் துளிக்க, என்குட்டன் வந்தென்னைப் புறம்புல்குவான்* என்றும் பணித்த பாசுரங்கள் யசோதைப் பிராட்டி பணித்ததுபோல் காணப்படினும் அவள் தானும் இவை பேசியறியாளே.

**மற்றையாழ்வார்கள் பேசாது இவரொருவரே பேசின இதிஹாஸங்கள்—**

1 (1-8-5) * கழல்மன்னர்சூழக் கதிர்போல்விளங்கி எழலுற்றுமீண்டேயிருந்து*
2 (1-8-8) * என்னிதுமாயம்...மன்னுநமுசியை வானில் சுழற்றிய *
3 (2-7-8) * சீமாலிகனவனோடு தோழமைக்கொள்ளவும் வல்லாய் சாமறவனை நீ *
4 (3-10-2) * அல்லியம்பூமலர்க்கோதாய்...மல்லிகைமாமாலைகொண்டங்கார்த்தது *
5 (4-1-5) *வாரேறு கொங்கையுருப்பிணியை வலியப்பிடித்துக்கொண்டு தேரேற்றிச் சேனை நடுவுபோர் செய்ய* (3-9-3) *உருப்பிணி நங்கையைத் தேரேற்றிக் கொண்டு.........செருக்குற்றான் வீரஞ்சிதையத் தலையைச் சிரைத்திட்டான்.* (4-3-1) *உருப்பிணிநங்கைதன்னை மீட்பான் தொடர்ந்தோடிச்சென்ற உருப்பனையோட்டிக் கொண்டிட்டு*
6 (4-1-8) *நாழிகை கூறிட்டு...சயத்திரதன்தலையைப்பாழிலுருளப் படைபொருதவன்
7 (4-2-7) *மன்னர்மறுக.....மோழையெழுவித்தவன்*
8 (4-9-5) *ஆமையாய்க் கங்கையாய் ஆழ்கடலாயவனியாயருவரைகளாய், நான்முகனாய் நான்மறையாய் வேள்வியாய்த் தக்கணையாய்த் தானுமானான், சேமமுடை நாரதனார் சென்றுசென்று துதித்திறைஞ்ச*
9 (4-9-6) *மைத்துனன்மார் காதலியை மயிர்முடிப்பித்து...உத்தரைதன்சிறுவனையும் உய்யக்கொண்டவுயிராளன்*

**10** (3-10-6) *சித்திரகூடத்திருப்ப* (2-6-7) *பொற்றிகழ் சித்திரகூடப் பொருப்பினில்......மற்றைக் கண்கொள்ளாமே*.

— இனி இவற்றிற்கு விவரணம் காண்க —

— *கண்ணனது சோதியைக்கண்டு துரியோதனாதியர் எழுந்தது* —

1. (*கழல் மன்னர் சூழ.*) கண்ணபிரான் பாண்டவதூதனாய்த் துரியோதனன் பாடே யெழுந்தருளினபோது, அக்கண்ணன் வருகையை முன்னம் அறிந்த துரியோதனன் பல அரசர்களைச் சபைகூட்டி யிருத்தி "இங்கே கண்ணன்வருவன்; வந்தால் ஒருவருமெழுந்து அவனுக்கு மரியாதை செய்யலாகாது" என்று உறுதியாய் நியமித்துத் தானும் ஸபையிலே உறுதியுடனிருக்க, மஹா தேஜஸ்வியான கண்ணபிரான் அங்கே யெழுந்தருளினவளவிலே அங்கிருந்த அரசர்களனைவரும் துரியோதனனுமுட்பட ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மாவின் சோதியைக்கண்டு பரவசர்களாயெழுந்து நிற்க, துரியோதனன் அரசர்களைநோக்கி 'என்கட்டளையை மீறி ஏன் எழுந்தீர்கள்?' என்று சீறி வினவ, 'பிரபு எழுந்தபடியால் நாங்களெழுந்தோம்' என்று அவர்கள்கூற, தான் எழுந்ததைப் பிறகு அறிந்த துரியோதனன் மீண்டு சடக்கென ஆசனத்திலுட்கார்ந்து கண்ணனை நோக்கினன். மஹாபாரதத்தில் *யதாஹம் கேஶவே வ்ருத்திம் அவரா:! ப்ரதிபேதிரே* என்று கூறியுள்ளதற்கு விவரண மிப்பாசுரம்.

— *உலகளக்கும்போது நமுசியை வானில் சுழற்றியது* —

2. (*என்னிதுமாயம் ...மன்னுநமுசியை வானில் சுழற்றிய*) மாவலி பக்கல் மூவடிவேண்டி நீரேற்று மூவுலகளந்த சரிதையை ஆழ்வார்களெல்லாரும் அருளிச் செய்திருந்தாலும், உலகளக்கிறபோது வந்து தர்க்கித்த நமுசியென்பவன் பங்கப்பட்ட கதையை இவ்வாழ்வாரொருவரே பேசினர். (கதையின்விவரணம்.) வாமனமூர்த்தி உலகளக்க ஓங்கினபோது அதுகண்ட மஹாபலியின் மகனான நமுசி ஓடிவந்து, யாசிக்கும்போதிருந்த வடிவம் மாறி அளக்கிறவிது என்ன மாயச் செய்கை! நீ செய்யுமிந்த மாயத்தை என் தகப்பனறியான்; நீ யாசிக்க வந்தபோதிருந்த வடிவத்தையே கொண்டு அளக்கவேணு மென்று பிடிவாதமாய்ச் சொல்லித் தடுக்க, அவனை ஆகாயத்திலே சுழற்றியெறிந்தனன் பகவான் என்பதாம்.

— *மாலிகன் தலையைச் சக்கரத்தால் மடித்தது* —

3. (*சீமாலிகனவனோடு.*) மாலிகன் என்பானொருவன் கண்ணபிரானுக்கு உயிர்த்தோழனாய் அப்பிரானிடத்தில் பலவகையாயுதங்களையும் பயின்று ஒருவர்க்கு மஞ்சாமல் அஹங்காரியாய் ஸாதுஜநங்களை ஹிம்ஸித்துக்கொண்டிருக்க, கண்ணபிரான் 'நண்பனாகிய இவனை நாம் கொல்வது தகாதே! என்ன செய்யலாம்? என்று வியாகுலப்பட்டு, ஒருநாள் அவனை நோக்கி 'நீ இப்படிச் செய்வது தகாது'என்ன;ஆஸுரப்ரக்ருதியான அந்த மாலிகன் தன் வாயில் வந்தபடி பிதற்றி 'நீ எல்லா ஆயுதங்களையும் எனக்குக் கற்பித்தும் சக்ராயுதப் பயிற்சியை மாத்திரம் செய்விக்க வில்லையே' என்று கண்ணன்மேற் குறைகூற, 'இதில் பழகுவது உனக்கு முடியாது' எனக்கே அஸாதாரணமானது, என்ன; 'என்னால் முடியாதது மொன்றுண்டோ? நீ அவச்யம் அதைக்

கற்பிக்கவேணும்' என்று அவன் நிர்ப்பந்திக்க, கண்ணன் 'இதுதான் தக்க ஸமயம்' என்று திருவுள்ளத்திற்கொண்டு சக்ராயுதத்தை யெடுத்துத் தன் ஒற்றை விரலால் சுழற்றி மேலெறிந்து கையிலேற்க, 'இது எனக்கு அரிதோ?' என்று மாலிகன் சொல்ல, 'இது உனக்கு அரிதே' என்று கண்ணன் சொல்லவும் அதை அவன் கேளாமல் அச்சக்கராயுதத்தை வாங்கிச் சுழற்றி யெறிந்து பிடிப்பதாக நினைத்துத் தன் கைவிரலைக் கழுத்துக்கு அடுத்துவைத்து நிற்க, அச்சக்கரம் சுழன்று வருவதற்கு இடம் போதாமையாலே அதன் வீச்சு இவன் கையில் பிடிபடாமல் இவன் தலையை அரிந்துவிட்டதென்பது—இப்பாட்டில் குறித்த கதை. இவ்வரலாறு எந்தப் புராணத்திலுள்ளதென்று ஆராய்ந்து பார்த்தும் பல பெரியோர்களைக் கேட்டும் ஆகரம் அறியப் பெற்றிலேன்; வந்தவிடத்திற் கண்டுகொள்க. *தத்ஸர்வம் தர்மவீர்யேண யதாவத் ஸம்ப்ரபச்யதி* என்று சதுர்முகன் வரத்தினால் வால்மீகி முனிவர் பகவதவதார வ்ருத்தாந்தங்களைத் தாமாக ஸாக்ஷாத்கரித்ததுபோலே ஆழ்வாரும் *மயர்வறமதிநலமருளப்பெற்றுத் தாமாக ஸாக்ஷாத்கரித்தவற்றில் இவ்வரலாறு ஒன்று என்பர் பெரியோர்; இப்பிரபந்தத்தின் ஈற்றுத் திருமொழியின் ஆரம்பாசுரத்தின் வியாக்கியானத்திலே பெரியவாச்சான் பிள்ளை தாமும் இதை ஸ்பஷ்டமாக அருளிச்செய்துள்ளார். ... ... ... *

— *பிராட்டி மல்லிகை மாமாலைகொண்டு பெருமானைக் கட்டினது* —

4. (*அல்லியம்பூ...மல்லிகைமாமாலை கொண்டு*) அயோத்தியிலிருந்த காலத்தில் பிராட்டியும் பெருமாளும் ராத்திரிவேளையில் ஏகாந்தமான இடத்தில் உல்லாஸமாக இருக்கையில், பிரணயரோஷத்தினால் பிராட்டி பெருமாளை மல்லிகை மாலையைக் கொண்டுகட்டியதை அநுமான் பிராட்டிக்கு அடையாளமாகக் கூறுகின்றான்; இது மிகவும் அந்தரங்கமாக நடந்திருக்குமாதலால், இது மற்ற அடையாளங்களைப் போலன்றிச் சிறந்த அடையாளமாகும். இப்பதிகத்தில் வநவாஸஞ்சென்றமை இன்னும் கூறப்படாமையால், இச்செயலை நாட்டிலிருந்தபோது நிகழ்ந்ததாகக் கொள்வது பொருந்தும்.

— ருக்மிணீபரிணய கதையின் விவரணம் வருமாறு; —

5. (*வாரேறு கொங்கை புருப்பிணியை வலியப்பிடித்துக் கொண்டு*) நம்மாழ்வார் திருவாய்மொழியில் 9-10-5. *அன்றங்கமர்வென்று உருப்பிணிநங்கையணிநெடுந்தோள் புணர்ந்தான்* என்று ருக்மிணீவிவாஹத்தை மிகச்சுருக்கமாகவே பேசினர் ஆண்டாளும் திருமொழியில் (11-9.) "கண்ணாலங் கோடித்துக் கன்னி தன்னைக் கைப்பிடிப்பான், திண்ணார்ந்திருந்த சிசுபாலன் தேசழிந்து, அண்ணாந்திருக்கவே ஆங்கவளைக் கைப்பிடித்த பெண்ணாளன்" என்றிவ்வளவே பேசினள். இவ்வாழ்வாரொருவரே மூன்று பாசுரங்களில் சிறிது விரித்துரைத்துள்ளார்.

ருக்மிணீ விவாஹ வ்ருத்தாந்தம் ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் ஐந்தாவது அம்சத்தில் இருபத்தாறுமத்யாயத்தில் அதிஸம்க்ஷிப்தமாக முடிக்கப்பட்டது. ருக்மிணியைக் கண்ணன் காதலித்திருந்தான். அவளும் கண்ணனைக் காதலித்திருந்தாள். கண்ணன் அவளைத் தனக்குக் கொடுக்கும்படி யாசித்தும் ருக்மிணியின் உடன் பிறந்தவனான ருக்மியானவன் த்வேஷத்தினாலே கண்ணனுக்குக் கொடாமல் சிசுபாலனுக்குக் கொடுப்பதாகவாக்களித்துக்கண்ணாலமும் கோடித்துவிட்டான். அப்போது அங்குசிசுபாலாதிகள்

வந்து சேர்ந்தது போல ஸ்ரீக்ருஷ்ண பலராமாதிகளும் வந்துசேர்ந்தனர். விவாஹத்தின் முன்னுளே கண்ணன் ருக்மிணியைக் கவர்ந்து த்வாரகைக்குத் தேரேற்றிக் கொண்டு போனுன். பிறகு ப்ரபலயுத்தம் நடக்க, வெற்றிபெற்ற கண்ணன் த்வாரகையில் ருக்மிணியை விதிப்படி மணந்து கொண்டான்—என்னுமிவ்வளவே ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் கூறிய கதை. ஹரிவம்சத்தில் விஷ்ணுபர்வத்தில் 59, 60 ஆகிய இரண்டு அத்யாயங்களில் இக்கதை சிறிது விரிவாக வருணிக்கப்பட்டது. அதிலும் ருக்மிணீ ஹரணம் சுருக்கமாகச் சொல்லப்பட்டு, பிறகு நடந்த போர் மிக விரிவாக வருணிக்கப் பட்டுளது. ஸ்ரீ பாகவத—தசமஸ்கந்தத்தில் (52, 53, 54 அத்யாயங்களில்) இக்கதை விரித்துரைக்கப்பட்டுள்ளது. அதனை ஸம்க்ஷேபித்து எழுதுகின்றேமிங்கு. விதர்ப்ப தேசத்தரசன் பீஷ்மகனென்பவன். அவனுக்கு ஐந்து புத்திரர்களும் ஒரு புத்திரியு மிருந்தனர். அவள்தான் ருக்மிணியென்கிற கடைப்பெண். அவள் இயற்கையில் ஸ்ரீ மஹாலக்ஷ்மியின் அம்சமாதலாலும், தன் தந்தையைக் காண வருபவர்கள் பலரும் ஸ்ரீக்ருஷ்ண குண சேஷ்டிதங்களை மேம்படச்சொல்லக் கேட்டவளாதலாலும் கண்ண பிரான்மீது மிக்க மயல்கொண்டாள். அவனையே மணந்து கொள்வதாக வுறுதிகொண் டாள். கண்ணனும் ருக்மிணியின் குணாதிசயங்களைக் கேட்டிருந்து அவளையே நெஞ்சிற் கொண்டனன். இந்த ஸம்பந்தத்தை உற்றுறவினரனைவரும் உகந்திருந்தனர். ருக்மியென்கிற அவளதுதமையன்மட்டும் கண்ணனிடத்துப் பகைகொண்டிருந்ததனுல் தங்கையான ருக்மிணியை சிசுபாலனுக்கு மணம் புரிவிக்க எண்ணங்கொண்டான். இதை யறிந்து மிக வருந்தின ருக்மிணி ஆப்தனனவோர் அந்தணனைக் கண்ணனிடம் தூதனுப்ப நினைத்தாள். தன் காதலைக்காட்டும் சில சுலோகங்களைப் பொறித்துப் பத்ரிகை யொன்று கொடுத்தனுப்பினுள். அதைப் பெற்றுக்கொண்ட வந்தணன் விரைந்துசென்று த்வாரகாபுரியைச் சேர்ந்து கண்ணபிரானைக்கண்டு பசிதீர்ந்து குசலப்ரச்னங்களெல்லா மான பிறகு ருக்மிணியின் ஸந்தேசத்தை கோப்யமாகக் கொடுத்தனன். ப்ரேமகனமான அப்பத்திரிகையிலிருந்த ஏழு சுலோகங்களையும் கண்ணபிரான் மிகுந்த குதூஹலத் தோடு வாசித்துப்பார்த்து உள்ளம் பூரித்தனன். அந்த ஸப்த ச்லோகியின் ஸாரமான கருத்தாவது, கண்ணு! உனது திருக் குணங்களைச் செவியுற்ற என்னுடைய மனம் நாணமற்று உன் பக்கலில் ஆழ்ந்து கிடக்கின்றது. ஸகல குணங்களும் நிரம்பிய உன்னை எந்தக் குல மகள்தான் விரும்பமாட்டாள்? செந்தாமரைக்கண்ணு! உனக்கே அற்றுத் தீர்ந்த வென்னை வேறொரு க்ஷத்ரன் தீண்டாதபடி நோக்கிக்கொள்ள வேணும். நான் செய்த பலவகைப்பட்ட ஸுக்ருதங்களினுல் பகவான் உகந்திருப்பனுகில் சிசுபாலன் முதலான அற்பர்கள் என்னைத் தீண்டாதொழிய வேணும். நாளை வதுவை மணமென்று நாளிட்டு சிசுபாலனுக்கு என்னைக் கொடுப்பதாக நிச்சயித்திருப்பதால் நீ சேனைகள் சூழ விரைந்து இவ்விடம் ஏகாந்தமாக வந்து எதிரிகளைத் தொலைத்திட்டு என்னைக் கைக்கொள்ளவேணும். அந்தப்புரத்தினுள்ளே யிருக்குமென்னைக் கைக் கொள்வ தெங்ஙனமென்று விசாரப்படவேண்டா; முன்னுள் தேவீ பூஜைக்கென்று ஒரு புறப் பாடுண்டு மணமகளானவெனக்கு; அந்த ஸமயத்தில் என்னைக் கைக்கொள்வது எளிய வுபாயம். எவ்வகையினுலேனும் உன் திருவருளுக்கு நான் விரைவில் இலக்காகாதொழி யில்வாழகில்லேன்; நூறு பிறவி பிறந்தாகிலும் உன்னைப்பெற்றே தீருவேன்—என்பதாம். இக் கருத்துக்கொண்ட சுலோகங்களை வாசித்த கண்ணபிரான் ஸந்தேசம் கொணர்ந்த அந்தணனை நோக்கி 'அவளுடைய காதலுக்குக் குறைந்ததன்று என்னுடைய காதல்;

ஆனாலும் விரோதி தனத்திருக்கின்றது; இருக்கட்டும்; எப்படியாவது அவளைக் கைக் கொண்டே தீருவேன்.—என்று சொல்லிச் சாரதியை யழைத்து விரைவில் தேரைக் கொண்டுவருமாறுகட்டளையிட, அப்படியே ரதம் வந்து நின்றது. வந்த அந்தணனுடன் தேரின்மேலேறிப் புறப்பட்டு ஓரிரவில் விதர்ப்பதேசம் வந்து சேர்ந்தாயிற்று. ருக்மிணியின் தந்தை தன்மகனுடைய வாக்குக்கு வசப்பட்டிருந்ததனால் மகளைச் சிசுபாலனுக்குக் கொடுக்க நிச்சயித்துச் சடங்குகளும் செய்தாயிற்று. *பாளை கமுகு பரிசுடைப் பந்தல்களும் தோரணாலங்காரங்களும் மற்றும் ஆச்சரியமான அமைப்புகளும் கண்ட விடமெங்கும் கண்களைக் கவருமாறு நிரம்பியிருந்தன. ருக்மிணிக்கும் உத்தமமான அலங்காரங்களைச் செய்வித்து விவாஹ பூர்வாங்கச் சடங்குகளை யெல்லாம் நிறைவேற்றியிருக்கையில், சிசுபாலனுடைய தந்தை தன் மகனுக்குச் செய்யவேண்டிய விவாஹ விரதங்களைச் செய்வித்து முடித்துப் பெருங்கூட்டத்துடன் வந்துசேர, பேருவகை கொண்ட விதர்ப்பராஜன் அவர்களை வெவ்வேறு விடுதிகளிலே யிருத்தினான். கண்ணனுக்கு வைரிகளும் சிசுபாலனுக்குத் துணைவர்களுமான ஸால்வன் ஜராஸந்தன் தந்தவக்ரன் பௌண்ட்ரகன் முதலானோர் பலரும் வந்து குழுமினர். கண்ணன் வந்து பலாத்காரமாக ருக்மிணியைக் கைக்கொள்ளப் போகிறானென்று ஒரு ப்ரவாதம் ஊரில் பரவியிருந்தபடியால் 'அப்படி ஏதேனும் விரோதம் நேருமாகில் போர் மூட்டிப் புடைத்திடுவோம்' என்றும் சொல்லிக் கொண்டிருந்தனர். இச்செய்தி பலராமனது செவியில்விழ கண்ணன் ஒருவனாகப் புறப்பட்டுச் சென்றிருப்பதை யறிந்து அதிசங்கித்து, பெருஞ்சேனைகளுடன் புறப்பட்டு உடனே விதர்ப்ப தேசத்திற்கு வந்து சேர்ந்தான். க்ருஷ்ண பலராமாதிகள் அப்ரகாசமாகவே ஒருபுறமிருந்தனர். ருக்மிணியோ துடிக்கிறாள், லக்னவேளை நெருங்குவதை நோக்கியும் கண்ணனிடமிருந்து ஒருசெய்தியும் கிடைக்காதது பற்றியும், போகவிட்ட அந்தணனும் மீண்டு வாராதது குறித்தும் எண்ணாதன பலவுமெண்ணிச் சிந்தைக்கடலுளாழ்ந்து துவண்டு கிடக்கிறாள். சுபசகுனங்கள் தோன்றுகின்றன, ஸுஸமயத்தில் கண்ணனால் ஏவப்பட்ட அந்த அந்தணன் அந்தப்புரத்திலே வந்து ருக்மிணியைக்கண்டு ஸந்தோஷச் செய்தியைத் தெரிவித்துவிலகினான். பலராமனும் கண்ணனும் பரிஜந பரிவாரங்களுடன் விவாஹ மண்டபத்தருகில் வந்துசேர, அவர்களைக் கண்ணாலங்காண வந்தவர்களாக நினைத்த அரசன் அவர்களுக்குத் தகுந்த மரியாதைகளைப்பண்ணி விடுதிகளிலே யிருத்தினான். கண்ணபிரான் வந்தனனென்று செவியுற்ற நகரத்தவர்களனைவரும் வந்து கண்ணனுடைய வடிவழகை நோக்கி 'நம்முடைய ருக்மிணிக்கு இவன் கணவனாக வாய்க்கமாட்டானா!' என்று இதுவே பேச்சாக விருந்தனர். இப்பால் ருக்மிணி அந்தப்புரத்தினின்று புறப்பட்டு இஷ்டதேவதையைத் தொழுவதற்கு எண்ணிறந்த பரிவாரங்களுடன் வீதியார வருகின்றாள். மத்தளங்கொட்டவும் வரிசங்கம் நின்றூதவும் வாய் நல்லார் நல்ல மறையோதவும் பாப்பனச் சிட்டர்கள் பல்லாரெடுத்தேத்தவும் மந்தகதியாக வருகின்றவள் அங்கு நிற்குமரசர்களை யெல்லாம் கடைக்கணிக்கும் வியாஜமாகக் கண்ணனைக்கண்டு காமுற்ற வண்ணமாகவே தேரின்மீது ஏறப்புக, *கண்ணாலங் கோடித்துக் கன்னிதன்னைக் கைப்பிடிப்பான், திண்ணார்ந்திருந்த சிசுபாலன் தேசழிந்து, அண்ணாந்திருக்கவே ஆங்கவளைக் கைப்பிடித்தபெண்ணாளன் பேணுமூர் பேருமரங்கமே* என்று ஆண்டாளருளிச் செய்தபடி அப்பிராட்டியைக் கண்ணன் கவர்ந்துகொண்டு விரோதி

வர்க்கங்களைக் கிழங்கெடுத்துத் துவராபதியிற் சென்று சேர்ந்து, சாஸ்த்ரவிதிப்படி மணம் புரிந்து லக்ஷ்மீபதியாக விளங்கினான். ருக்மிணி விவாஹவிளக்கம் முற்றிற்று.

இங்கொரு விஜ்ஞாபனம்;—ஸ்வாமி தேசிகன் பணித்த யாதவாப்யுதயத்தில் பதினோராம் ஸர்க்கத்தின் முடிவில் பலராமரேவதிகளின் பரிணயத்தைக்கூறித் தலைக்கட்டி, பன்னிரண்டாம் ஸர்க்கத்தில் ருக்மிணீப்ரஸ்தாவம் தொடங்கப்பட்டது. இந்த ஸர்க்கம் பூர்த்தியாகப் பெரும்பாலும் ருக்மிணியின் ஸௌந்தர்ய லாவண்ய வர்ணந ப்ரசுரம். அடுத்த பதின்மூன்றாம் ஸர்க்கத்தில் கண்ணபிரானெழுந்தருள்வது முதலான சரிதைகள் சொல்லப்படுகின்றன. ருக்மிணி ஒரு ப்ராஹ்மணனைக் கண்ணனிடம் தூதனுப்பியதாக ஸ்ரீ பாகவதத்தில் சொல்லப்படுகிற கதையை இதில் ஸ்வாமி யருளிச் செய்யாததனால் அது ப்ரக்ஷிப்தமாயிருக்குமோவென்று சிலர் சங்கிக்கிறார்கள். அந்த சங்கைவேண்டா. (யாதவ—ஸர்க்க. 13 சுலோ. 20ல்) *அஹம் த்வயா தூதமுகேந தூராத் ஸாத்வ்யா ஸமாஹூத இஹோபயாத:* என்பதில் "தூதமுகேந அஹம் த்வயா ஸமாஹூத:" என்று கண்ணபிரான் சொல்லுவதாக இருப்பது கண்டு தெளிக.

— ஜயத்ரதவதக் கதை —

௬. (*நாழிகை கூறிட்டு...சயத்திரதன் தலையை.*) மஹாபாரத யுத்தத்திற் பதின்மூன்றுநாளிலே அர்ஜுன புத்திரனான அபிமன்யுவைத் துரியோதனனது உடன்பிறந்தவள் கணவனான ஸைந்தவன் கொன்றுவிட, அங்ஙனம் தன்மகனைக் கொன்ற அந்த ஜயத்ரதனை மற்றைநாள் ஸூர்யாஸ்தமனத்திற்குள் தான் கொல்லாவிடின் தீக்குதித்து உயிர்விடுவதாக அர்ஜுனன் சபதஞ்செய்ய, அதனையறிந்த பகைவர்கள் பதினான்கா நாட் பகல் முழுவதும் ஜயத்ரதனை வெளிப்படுத்தாமல் ஸேனையின் நடுவே நிலவறையில் மறைத்து வைத்திருக்க, அர்ஜுனனது சபதம் பொய்த்துவிடுமே யென்று சிந்தித்த கண்ணபிரான், அஸ்தமிப்பதற்குச் சில நாழிகை முன்னமே தனது சக்ராயுதத்தால் ஸூர்யனை மறைத்துவிட, அப்பொழுது எங்கும் இருள் அடர்ந்ததனால் அர்ஜுநன் அக்நிப்பிரவேசஞ் செய்யத் தொடங்க, அதனைக் களிப்போடு காணுதற்குத் துரியோதனாதியருடனே ஜயத்ரதன் வந்து எதிர்நிற்க; அச்சமயத்திற் கண்ணன் திருவாழியை வாங்கிவிடவே, பகலாயிருந்ததனால் உடனே அர்ஜுநன் ஜயத்ரதனைத் தலைதுணித்தான். திருவாழியாழ்வானால் ஸூரியனை மறைத்தகதை மற்றுஞ்சில ஆழ்வார்களாலும் அருளிச்செய்யப்பட்டிருந்தாலும், ஜயத்ரதனை முடித்தகதை பெரியதிருமொழியில் (௬-5-8) *வெள்ளைப்புரவித்தேர் விசயற்காய் விறல்வியூகம் விள்ளச் சிந்துக்கோன் விழவூர்ந்தவிமலன்* என்று திருமங்கையாழ்வாரால் காட்டப்பட்டிருந்தாலும், பெரியாழ்வார் *நாழிகை கூறிட்டு* என்ற பாசுரத்தினால்தான் வ்யக்தமாகப் பணித்தனர்.

— குருக்ஷேத்திரத்தில் கண்ணன் மோழை யெழுவித்தது —

7. *மன்னர்மறுக.........மோழையெழுவித்தவன்* பாரதயுத்தத்திற்காகக் குருக்ஷேத்ரம் செல்லும்போது, அர்ஜுனனுடைய தேர்க்குதிரைகள் தண்ணீர்க்கு விடாய்த்து இளைத்தவளவில் அவன் பக்கல் பக்ஷபாதியான கண்ணபிரான், கடினமான ஸ்தலத்திலும் நீர் நரம்பு அறிய வல்லவனாதலால், அங்கு வாருணாஸ்திரத்தைப் பிரயோகித்துக் கீழுள்ள நீரை வெளிக்கிளப்பிக் குதிரைகளை விட்டு நீரூட்டிப்புரட்டி

யெழுப்பிக்கொண்டு போந்து பூட்டிக்கொண்டுவந்து முன்னே நிறுத்த, இதைக்கண்ட மாற்றரசரெல்லாம் 'அர்ஜுனன் பக்கல் இக்கண்ணனுக்குப் பக்ஷபாதமிருந்தபடி யென்! இனி நாம் இவனை வெல்லுகையென்று ஒன்றுண்டோ?' என்று குடல் மறுகினர்.

— ரைவதககிரியில் நாரதமஹரிஷிவர்வந்து கண்ணனைப் புகழ்ந்தது —

8. *ஆமையாய்க் கங்கையாய்* துரியோதனாதியருடைய யாகத்தில் வந்த அரசர்களனைவரும் ஸ்ரீத்வாரகையின் மஹிமையையும், அங்கு ஸ்ரீக்ருஷ்ணன் எழுந்தருளியிருக்கிற மதிப்பையுமெல்லாம் துரியோதநாதிகளின் முகமாகக் கேட்டுத் தாங்கள் கண்ணபிரானோடு உறவு பண்ணிக்கொள்ள விரும்பி, அத்துரியோதநாதியருடனும் பாண்டவர்களுடனும் ஸபரிவாரராய்ப் புறப்பட்டு ரைவதக பர்வதத்திற்குப் போந்து தாங்கள் க்ருஷ்ணஸேவார்த்தமாக வந்திருக்கிறபடியைக் கண்ணபிரானுக்குத் தெரிவிக்க, அதையறிந்த கண்ணனும், இவர்கள் பரிவாரங்களுடன் திரண்டு வருகைக்குக் காரணம் யாதோ' என்று சிந்தித்து ஸ்ரீபலராமனையும் ஸாத்யகியையும் முன்னிட்டுக் கொண்டு ஸேனைகளுடனும் ஆயுதங்களுடனும் அவர்களிருக்குமிடத்திற் கெழுந்தருளி எல்லாரையும் குசலங்கேட்டு அவரவர்களுடைய வயஸ்ஸுக்கும் வலிவுக்கும் அறிவுக்கும் பெருமைக்கும் தக்கவாறு ஆஸநமிடுவித்துத் தானும் தனக்கேற்றதொரு சீரிய சிங்காசனத்தில் எழுந்தருளியிராநிற்கச்செய்தே ஸ்ரீநாரதமஹரிஷி வந்து வணங்கி ஸ்ரீக்ருஷ்ணபகவானை நோக்கி 'ஸர்வதேவர்களிற் காட்டிலும் நீர் ஆச்சரியகரரும் தந்யரும் [தந்யன்—க்ருதார்த்தன்.] ஆகாநின்றீர்; இங்ஙனிருப்பார் இவ்வுலகில் வேறு யாருமில்லை' என்று விண்ணப்பஞ் செய்ய, கண்ணபிரான் அதைக் கேட்டுப் புன்முறுவல்செய்து, 'முனிவனே! தக்ஷிணைகளோடுகூட நான் ஆச்சரியனாகவும் தன்யனாகவும் சொல்லப்பட்டவன்' என்றருளிச்செய்ய, அதனைக்கேட்ட முனிவன் மிகவும் மனமகிழ்ந்து 'பிரானே! தேவரீர் அருளிச்செய்த வாக்கியத்தினால் அடியேன் மிகவும் மகிழ்வுற்றேன்; இனி வந்தவழியே விடைகொள்கிறேன், என்று விண்ணப்பஞ் செய்துபோக நினைத்தவளவில், அங்குள்ள அரசர்கள் இப்படி ஸ்ரீகிருஷ்ணனுக்கும் நாரதமுனிவற்கும் நடந்த ஸம்வாதத்தின் உட்பொருளைத் தாங்கள் அறியாமையாலே ஸ்ரீகிருஷ்ணனுடைய திருமுகமண்டலத்தை நோக்கி 'நாரதமுனிவன் தேவரீரைக் குறித்துச் சொன்ன வாக்கியமும், அதற்கு உத்தரமாகத் தேவரீர் அருளிச்செய்த வாக்கியமுமாகிற இந்த மஹாரஹஸ்யம் எங்களுக்கு இன்னதென்று விளங்கவில்லை; இதனை விரித்துரைக்க வேணும், என்று பிரார்த்திக்க, கண்ணபிரானும் அம்முனிவன்றன்னையே கூறுமாறு நியமித்தருள, அம்முனிவன் அவ்வரசர்களை நோக்கி இவ்வண்ணம் கூறத்தொடங்கினான்;—நான் ஒருகால் கங்கைக்கரையிலே த்ரிஷவண ஸ்நாநாதிகளைப் பண்ணி வர்த்தியாநிற்கச்செய்தே, ஒருநாள் இரவு கழிந்து சூரியனுதித்தவளவில், கூப்பீடு வழியளவுஅகலமும் அதில் இரட்டித்த நீளமுமாய் நீரினுள்ளே நனைந்து உடம்புமுழுவதும் பாசியேற்றிக் கண்ணுக்கு இனிதாயிருப்பதொரு ஆமையைக் கண்டு 'இப்படி நீரினுள்ளே ஒன்றையும் சிந்தியாமல் சங்கையற்றுத் திரியாநின்ற நீ அற்புதமான சரீரத்தை புடையனாகாநின்றாய், தந்யனாகாநின்றாய்—என்று யான் அறுதியிட்டிருக்கின்றேன்' என்று நான் சொல்ல அதனைக்கேட்ட அந்த ஆமை என்னைப்பார்த்து, ஒரு மனுஷ்யன் சொல்லுவதுபோல, 'வாரீர் முனிவரே! என்னிடத்தில் ஆச்சரியமேது? நான் எங்ஙனே தந்யனாகாநின்றேன்? என்னைப்போன்ற பதினாயிரம் ஸத்வங்கள் ஸஞ்சரிக்கப்பெற்ற

கங்கா நதியன்றோ அங்ஙனவைது' என்று சொல்ல; பிறகு நான் அக்கங்கையைக் குறித்து அங்ஙனே சொல்ல; அதுகேட்ட அக்கங்கையானது ஒரு வடிவு கொண்டு நின்று ஆமையைப் போலவே சொல்லி 'என்னைப்போற் பல்லாயிரம் நதிகள் சென்று சேர்தற்கிடமான கடலன்றோ ஆச்சரியமும் தந்யமுமாவது' என்று சொல்ல; பிறகு நான் அக்கடலை நோக்கி அங்ஙனே சொல்ல; அக்கடல் என்னைப்பார்த்து 'நீர் சொன்னவையிரண்டும் எனக்கில்லை; யாதொரு பூமியின் மெல் நான் வாஸம் பண்ணு நிற்கிறேனே அப்பூமிக்கன்றோ அவையிரண்டுமுள்ளது' என்ன. பிறகு நான் பூமியை நோக்கிப் புகழ்ந்துகொண்டு 'ஆச்சரியபூதையாகா நின்றாய், தந்யையுமாகா நின்றாய்' என்று சொல்ல; அதுகேட்ட பூமி 'யான் அங்ஙனுள்ளவளல்லள்' எனக்கு ஆதாரமாயிருக்கின்ற பர்வதங்களன்றோ அப்படிப்பட்டவை' என்ன. பிறகு நான் அப்பர்வதங்களைக் கிட்டி அங்ஙனே சொல்ல; அவை என்னைப்பார்த்து 'அப்படிப்பட்டவை நாம் அல்லோம்' பிரஜாபதியான பிரமனன்றோ இவையிரண்டையுமுடையான்' என்ன; பிறகு நான் பிரமனைச் சென்று கிட்டி, அடைவுபட அநுவர்த்தித்துப் புகழ்ந்துகொண்டு 'பிரமதேவனே! ஆச்சரியனுகா நின்றாய், தன்யனுகா நின்றாய்' உன்னை யொப்பவர் ஆருமில்லை' என்ன; அதைக்கேட்ட பிரமன் என்னைப்பார்த்து 'இங்ஙனே என்னைப் புகழ்வதென்? ருக், யஜுஸ்; ஸாமம், அதர்வணம் என்னும் பெயருடையனவும் தத்துவங்களை உணர்த்துவனவும்' உலகங்களையும் என்னையும் தரியா நின்றனவுமான வேதங்களன்றோ அப்படிப்பட்டவை' என்ன; பிறகு நான் வேதங்களைக் கிட்டி 'நீங்களன்றோ ஆச்சரியபூதரும் தன்யரும்' என்ன; அந்த வேதங்கள் என்னைப்பார்த்து 'நாங்கள் யஜ்ஞார்த்தமாகப் படைக்கப் பட்டவர்களாதலால்' எமக்குப் பராயணங்களான [பராயணம்-சிறந்தகதி] அந்த யஜ்ஞங்களன்றோ அப்படிப்பட்டவை' என்ன; பின்பு நான் அந்த யஜ்ஞங்களைப் பார்த்துப் புகழ்ந்து 'உலகத்தில் உங்களிற்காட்டில் ஆச்சரியங்களுமில்லை' தந்யங்களுமில்லை' என்ன. அந்தயஜ்ஞங்கள் என்னைப்பார்த்து 'ஆச்சரியசப்தமும் தந்யசப்தமும் எங்கள் பக்கலில் இல்லை; விஷ்ணுவிடத்தில் அவை உள்ளன; அவ்விஷ்ணுவே எங்களுக்குச் சிறந்தகதி; தீயில் ஹோமம் பண்ணப்பட்டு எம்மால் ஸ்வீகரிக்கப்படும் நெய்யை அவ்விஷ்ணுதானே கொடுக்கிறார் என்ன; அதனைக்கேட்டயான் பூமியில் வந்து உங்கள் திரளின் நடுவே எழுந்தருளியிருக்கிற ஸ்ரீகிருஷ்ணபகவானைக் கண்டு ஸேவித்து 'ஆச்சரியருமாகா நின்றீர்' தந்யருமாகா நின்றீர்' என்று விண்ணப்பஞ்செய்ததற்கு உத்தரமாக 'தக்ஷிணைகளோடே கூட நான் ஆச்சர்யனுகவும் தந்யனுகவுஞ் சொல்லப்பட்டவன்' என்று கண்ணபிரானருளிச் செய்த வார்த்தை என்னை மகிழ்வித்தது. இந்த ரஹஸ்யார்த்தத்தை உங்கட்கு நான் சொல்லித் தலைகட்டினேன். இனி நான் வந்தவழியே போகிறேன்—என்று. ஸ்ரீஹரிவம்ச விஷ்ணுபர்வத்தில் நூற்றுப்பதினேராவது அத்தியாயத்திலுள்ள கதை.

### — உத்தரைதன் சிறுவனை யுய்யக்கொண்ட வரலாறு —

9. பண்டு பாரதப்போரில், அர்ஜுனன் மகனை அபிமந்யுவின் மனைவியாகிய உத்தரை என்பவளுடைய கருவை நோக்கி அசுவத்தாமாவினல் பிரயோகிக்கப்பட்ட அபராண்டவாஸ்திரத்தினல் அக்கருவிலிருந்த சிசு[பரீக்ஷித்]நீருகியொழிய, அச்சிசுவை மீண்டும் உயிர்பெறுத்த வேணுமென்று ஸுபத்திரையினல் பிரார்த்திக்கப்பட்ட கண்ணபிரான் தனது செந்தாமரைமலர்போன்ற திருவடியிலை அச்சிசுவை அடிதொடங்கி

முடியிருக ஸ்பர்சித்தருள, உத்தரக்ஷணத்திலேயே அச்சிசு உயிர்பெற்றது. பிறகு ப்ராப்த காலத்தில் ஜனித்தது. இந்த ஸந்தர்ப்பத்தில்தான் கண்ணபிரான் *யதி மே ப்ரஹ்மசர்யம் ஸ்யாத்...என்று பதம் செய்தது.

— காகத்தின் கண்ணை யறுத்த வரலாறு —

10. வநவாஸ காலத்தில் சித்திரகூட மலைச்சாரலிலே பெருமாளும் பிராட்டியும் ஏகாந்தமாக இருக்கிற ஸமயத்தில் இந்திரன் மகனை ஜயந்தன் மாம்ஸருசியாலே தேவ்வேஷத்தை மறைத்துக் காகவேஷத்தைப் பூண்டு கொண்டு வந்து, பிராட்டியின் மடியிலே பெருமாள் பள்ளிகொண்டருளுகையில் தாயென்றறியாதே பிராட்டியின் திருமார்பினிற் குத்த, அவ்வளவிலே பெருமாள் உணர்ந்தருளி மிகக் கோபங்கொண்டு ஒரு தர்ப்பைப்புல்லை யெடுத்து அதில் ப்ரஹ்மாஸ்த்ரத்தை மந்திரித்து ப்ரயோகித்து அதனை அந்தக் காகத்தின்மேல் மந்த கதியாகச் செலுத்த அக்காகம் அந்த அஸ்த்ரத் துக்குத் தப்ப வழிதேடிப் பல விடங்களிலும் ஓடிச் சென்று சேர்ந்த விடத்தும் ஒருவரும் ஏற்றுக் கொள்ளாமையாலே மீண்டும் பெருமாளையே சரணமடைய அப்பெருமாள் அருள்கொண்டு, அக்காகத்துக்கு உயிரைக் கொடுத்து அந்த அஸ்திரம் வீண்படாமல் அதன்ஒருகண்ணை அறுத்தவளவோடுவிட்டருளினன் (கதைகளின் விவரணம் முடிந்தது)

பெரியாழ்வார் வைபவ நிகமனம்;— ஸ்ரீவசன பூஷணத்தில் மங்களாசாஸன ப்ரகரணத்தில் பெரியாழ்வாரைப்பற்றின சூர்ணைகள் 250முதல் 257வரையிலுள்ளவை பரமபோக்யங்கள். மணவாளமாமுனிகளின் வியாக்கியானங்கொண்டு பொருளுணர்க. அந்த சூர்ணைகளாவன; —

(250) "ஆழ்வார்களெல்லாரையும் போலல்லர் பெரியாழ்வார். (251) அவர் களுக்கிது காதாசித்கம்; இவர்க்கிது நித்யம். (252) அவர்களுடைய அழுங்கால்தானே இவர்க்கு மேடாயிருக்கும். (253) அவர்களுக்கு உபயசேஷத்வத்தை அழித்து ஸ்வரூ பத்தைக் குமிழ்நீருண்ணப் பண்ணுமது இவர்க்கு உபயவ்ருத்திக்கும் ஹேதுவாய் ஸ்வ ரூபத்தைக் கரையேற்றும். (254) பயநிவர்த்தகங்களுக்கு பயப்படுவது, ப்ரதிகூலரையு மநுகூலராக்கிக் கொள்ளுவது, அதீதகாலச்களி லபதாநங்களுக்கு உத்தரகாலத்திலே வயிறெரிவது ப்ராப்திபலமு மிதுவேயென்பது. அநிமிஷரைப்பார்த்து உறகலுறகல் என் பதாய்க் கொண்டு இதுதானே யாத்ரையாய் நடக்கும். (255) அல்லாதவர்களைப் போலே கேட்கிறவர்களுடையவும் சொல்லுகிறவர்களுடையவும் தனிமையைத் தவிர்க் கையன்றிக்கே ஆளுமாளாரென்கிறவனுடைய தனிமையைத் தவிர்க்கைக்காகவாயிற்று பாஷ்யகாரருமிவருமுபதேசிப்பது. (256) *அல்லாதார்க்கு ஸத்தாஸம்ருத்திகள் தர்சநாநுபவ கைங்கர்யங்களாலே; இவர்க்கு மங்களாசாஸநத்தாலே. (257) உகந் தருளின நிலங்களை யநுஸந்தித்தால் ஊணுமுறக்கமு மின்றிக்கே இவருடைய யாத்ரையே நமக்கெல்லார்க்கும் யாத்ரையாகவேணும்." ... ... •

## பெரியாரின் பரமபதப்ராப்தி

ஸ்ரீமான் உபயவேதாந்த வித்வச்சிரோமணி, தாமல், வங்கீபுரம், பார்த்தஸாரதி ஐயங்கார் தமது அறுபத்து மூன்றுவது பிராயத்தில் நேற்று க்ருஷ்ணசதுர்த்தியன்று பெரிய காஞ்சியில் தமது திருமாளிகையில் திருநாடலங்கரித்தது சோசநீயம். இவரு டைய திருக்குமாரர்கள் மூவரும் சிறந்த குணசாலிகளாய் விளங்குவதனால் சோக ஶாந்தியாகிறது. ... ... ... ... •

# ம்ருதஸஞ்ஜீவநம் ராமசரிதம்

## பட்டருகந்த ஸ்ரீராமாயணம்.

ஸ்ரீகாஞ்சி ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் எழுதியது.

"ராமாவதாரமென்றால் பட்டர் மிகவும் பக்ஷபதித்திருப்பர்" என்று நம் ஆசார்ய கோஷ்டியில் ஸுப்ரஸித்தமாகையாலே ஸ்ரீராம பக்ஷபாதியான பட்டர் தம்முடைய ஸஹஸ்ரநாமபாஷ்யத்தில் *ராமோ விராமோ விரத:* இத்யாதி திருநாமங்களுக்கு முன்னே "பரர்த்தி: பரமஸ்பஷ்ட:" என்னுமிடத்தில் "அத ம்ருதஸஞ்ஜீவநம் ராமசரிதம்" என்றருளிச் செய்துள்ளார். (பரர்த்தி:) என்கிற திருநாமம் முதலாக ம்ருதஸஞ்ஜீவினியான ராமகதை சொல்லப்படுகிறது என்றபடி. பரர்த்தி:, பரமஸ்பஷ்ட: துஷ்ட: புஷ்ட: சுபேக்ஷண: ராம: விராம: விரத: மார்க்க: நேய: நய: அநய:, வீர: சக்திமதாம்ச்ரேஷ்ட: தர்ம: தர்மவிதுத்தம:—என்கிற பதினாறு திருநாமங்களும் ராம சரித்திரங்களைத் தெரிவிப்பனவாக பட்டர் திருவுள்ளம் பற்றினபடி. இத்திருநாமங்களை விவரிக்கும் முகத்தால் ஸ்ரீராம குணாநுபவம் செய்யலாகிறது.

1. பரர்த்தி: — 'பரா ருத்தி: யஸ்மின் ஸ: — பரர்த்தி: = ருத்தியாவது ஸம்ருத்தி; மிக்க ஸம்ருத்தியையுடையவனென்றபடி. செல்வம் மல்கியிருப்பவனென்கை. ஆழ்வார்கள் பலவிடங்களிலும் *செல்வம் மல்கு குடித் திருவிண்ணகர் *செல்வம் மல்கி யவன்கிடந்த திருக்கோளூர் *செல்வம் மல்கு தென் திருக்குடந்தை* என்றாப்போலே யருளிச்செய்கிறார்கள்; இவ்விடங்களில் கல்யாணகுண ஸம்ருத்தியையே முக்கியமான செல்வமாக வியாக்கியானித்தருளுகிறார்கள். "பவாந் ஸர்வத்ரைவ து அகணித மஹாமங்கலகுண:" என்று ஆழ்வானருளிச்செய்தபடி எம்பெருமானுடைய ரூபங்களெல்லாவற்றிலுமே குணபூர்த்தி குறையற்றிருந்தாலும் ஸ்ரீராமாவதாரமொன்றில்தான் குணபௌஷ்கல்யம் விசேஷித்துக் காணலாயிருக்கும். ஸ்ரீராமாயணத்தில் கயிறுபோட்டு எந்த இடமெடுத்தாலும் அவ்வவ்விடமெல்லாம் குணகீர்த்தன ப்ரசுரமாகவே காணலாகும். ஸ்ரீராமாயணத்தின் உபக்ரமமே குணங்களைப்பற்றின வினாவிடை. சக்ரவர்த்தி திருக்குமாரனை முடிசூட்டித் தான் தவம் புரியப் போவதாக அறுதியிட்டு மஹாஸபைகூட்டி ப்ரஜைகளின் அபிப்ராயத்தை வினவும்போது "அநேகவர்ஷஸாஹஸ்ரோ வ்ருத்தஸ் த்வமஸி பார்த்திவ!" — கிழவா! ஒழிந்து போ, கிழவா! ஒழிந்து போ என்றார்கள். பிறகு சக்ரவர்த்தி ப்ரஜைகளை நோக்கிக் கேட்கிறான்—'உங்களைக் கேளாமலே நான் வஸிஷ்டாதிகளோடு மட்டும் கலந்து முடிவுசெய்யலாமாயிருக்கச் செய்தேயும் உங்களுக்கொரு பெருமை கொடுக்க வேண்டிக் கேட்டேன்; நீங்களும் பெருந்தன்மையுடன் விடை கூறியிருக்கலாம். 'உமக்கு இஷ்டமானபடி செய்க' என்று விநயமஸ்ருணமாகச் சொல்லியிருக்கலாம். அதைவிட்டு, இதுவரையில் நான் அதர்மராஜ்யம் செய்ததுபோலவும், நீங்கள் என்னைவிட்டு நீங்குவதற்கு ஸமயம் பார்த்திருந்தது போலவுங் காட்டி என்னிடத்திலே மிக்க வெறுப்புத் தோற்றப் பேசினீர்களே, நான் செய்த தவறு என்ன? என்று. அதற்குப் ப்ரஜைகளின் விடை யாதெனில்; [பஹவோ ந்ருப! கல்யாண

குண: புத்ரஸ்ய ஸந்தி தே] மஹாப்ரபோ! உம்மிடத்தில் ஒரு குறைகண்டு சொன்னோமல்லோம்; நீர் பெற்ற பிள்ளை * குண,நாமாகரோ மஹான் * என்னும்படி யிருக்கையாலே அவன் கோற்கீழே வாழவேணுமென்னு மாசையொழிய வேறில்லை என்றார்கள் ஸ்ரீராம குணங்களை வாயாரச் சொல்லிச் சொல்லிக் கண்ணீர் பெருக்குகிறார்கள். (அயோத். இரண்டாவது ஸர்க்கம் காண்க.) இங்ஙனே காண்டந்தோறும் ராமகுணங்கள் ஸர்க்கம் ஸர்க்கமாக ஒவ்வொருவர் முகமாய்ப் பேசப்படுகையாலே இப்படிப்பட்ட குணஸம்ருத்தியையிட்டுப் ப்ராந்தி: என்கிறது. இனி "பரேஷாம் ருத்திரேவ (ஸ்வஸ்ய) ருத்தி: யஸ்ய" என்று கொண்டு பரஸம்ருத்தியே பேருயிருப்பவன் இராமன் என்றுங் கொள்ளத்தகும். ஸுக்ரீவ விபீஷணாதிகளுக்குப் பட்டாபிஷேகம் நடத்திவைக்காமல் தான் முடிசூடுவதில்லை யென்றிருந்தபடியால் இத்திருக்குணம் நன்கு விளங்கும். "த்வயி கிஞ்சித் ஸமாபந்நே கிம் கார்யம் ஸீதயா மம" என்றவிடம் பரஸம்ருத்தியையே பேணுமவர் பெருமாள் என்பதற்கு முக்கியமான சான்றாகும். லங்காத்வாரத்தில் பெருமாள் எழுந்தருளி நிற்கச்செய்தே ராவணன் கோபுரசிகரத்திலே வந்து தோற்றினவாறே 'ராஜத்ரோஹியான பையல் பெருமாள் திருமுன்பே நிற்கையாவதென்?' என்று ஸுக்ரீவமஹாராஜர் அவன் மேலேயெழப்பாய்ந்து வென்று வந்தபோது பெருமாள் அருளிச்செய்கிறார் [ஏவம் ஸாஹஸ யுக்தாநி ந குர்வந்தி ஜநேச்வரா:] சிலர்மேல் விழவேண்டினால் பரிகரபூதரையன்றோ ஏவவேண்டுவது; தலைவராயிருப்பாரோ மேல்விழுவது? [த்வயி கிஞ்சித்ஸமாபந்நே கிம்கார்யம் ஸீதயா மம?] பிராட்டியைப் பெறுவதற்காகவன்றோ நாம் இத்தனை பாடுபடுவது; உம்முடைய பெருமைக்கு ஒரு குறை விளையுமாயின் அந்தப் பிராட்டியினால்தான் எனக்கென்ன? என்று இங்ஙனே சொன்ன பெருமாள் பரஸம்ருத்திக்கு விரோதமின்றியிலே ஸ்வஸம்ருத்தியைப் பேணுமவரென்று விளங்க நின்றதாயிற்று. இத்திருநாமத்தை இன்னமும் விவரிக்கலாம். மேலே செல்வோம்.



2. பரமஸ்பஷ்ட: — * ந சக்ஷுஷா பச்யதி கச்சநைநம் * ந மாம்ஸ சக்ஷுரபிவீக்ஷதே தம் * * என்றேனும் கட்கண்ணால் காணாதவவ்வுரு * இத்யாதிப்படியே ஒருவர் கண்ணுக்கும் காணவொண்ணாதிருந்த வடிவத்தை அனைவரும் கண்டுகளிக்கும்படி மிகவும் ஸ்பஷ்டமாக்கிக் கொடுத்தவனென்கை. ஆழ்வான் அதிமாநுஷஸ்தவத்தில் (10) "க்ஷோதீயஸோபி ஹி ஜநஸ்ய க்ருதே க்ருதீ த்வம் அத்ராவதீர்ய நநு லோசநகோசரோபூ:" என்றருளிச் செய்ததை இங்கே அநுஸந்திப்பது. பரமஸ்பஷ்ட: என்பதற்கு – பரமத்வம் ஸ்பஷ்டமாயிருக்கப் பெற்றவர் என்கிற பொருள் பட்டருடைய பாஷ்யத்தில் விளங்குமது. 'பரத்துவத்தை மறைத்து வந்து அவதரித்திருக்கச் செய்தேயும் அது சிலர்க்கு ஸ்பஷ்டமாக விளங்கா நின்றதென்பதை ஸ்ரீராமாயணத்தினறிகிறோம். பெருமாளுடைய வநவாஸப்ரஸங்கத்தில் கிலேசப்படா நின்ற கௌஸல்யாதேவியைத் தேற்றுகின்ற ஸுமித்திரை "ஸூர்யஸ்யாபி பவேத் ஸூர்ய: ரக்நேரக்நி: ப்ரபோ: ப்ரபு: ச்ரிய: ஸ்ரீச்ச பவேதக்ர்யா கீர்த்யா: கீர்த்தி: க்ஷமா க்ஷமா; தைவதம் தேவதாநாஞ்ச" இத்யாதியாலே பெருமாளுடைய பரத்துவத்தைத்தான் ஸ்பஷ்டமாகக் கண்டறிந்து பேசுகிறாள். இராவணன் மாண்ட பிறகு ப்ரேத பூமியிலே வந்து புலம்புகின்ற மந்தோதரி * வ்யக்த மேஷ மஹாயோகீ பரமாத்மா ஸநாதந:, அநாதி மத்யநிதந:........தமஸ: பரமோ தாதா சங்கசக்ர கதாதர:. ஸ்ரீவத்ஸவக்ஷா நித்யஸ்ரீ: அஜய்யச்

சாச்வதோ த்ருவ: மாநுஷம் ரூபமாஸ்தாய விஷ்ணுஸ் ஸத்ய பராக்ரம:.* இத்யாதியாலே பெருமாளுடைய பரத்துவத்தை அதிஸ்பஷ்டமாகக் கண்டு பேசுகிறாள். பம்பா தீரத்தில் முதன்முதலாகப் பெருமாளைக் காணவந்த திருவடி **"ஆயதாச் ச ஸுவ்ருத்தாச் ச பாஹவ: பரிகோபமா:, ஸர்வபூஷண பூஷார்ஹா: கிமர்த்தம் ந விபூஷிதா.!*"** என்று கேட்கிறார். இங்கு 'ஆயதௌ ச ஸுவ்ருத்தௌ ச பாஹூ தே பரிகோபமௌ' என்று த்விவசனமாக சுலோகம் கூடுமதாயிருக்க பஹுவசன மிட்டுச் சொன்னதுபற்றி கோவிந்தராஜர் எழுதுகிறார். — "ஹநுமதோ பக்தத்வேந தஸ்ய சதுர்ப்புஜவேஷேண த்ருச்யோபவத்" என்று (அதாவது) திருவடி பரம பக்தராகையாலே அவர்க்கு நிஜரூபத்தைக்காட்டினரென்றபடி. அன்றியும் ஸமுத்ர சரணாகதி ப்ரகரணத்தில் பெருமாள் தலையணையாக வைத்துக்கொண்ட பாஹுவை வருணிக்கின்ற வான்மீகி முனிவர் **"புஜை: பரமநாரீணும் அபிம்ருஷ்ட மநேகதா"** என்கிறார். இங்கு பரமநாரிகளாகச் சொன்னது ஸ்ரீதேவீ பூதேவீ நீலாதேவிகளை யென்று வியாக்கியானம். ஆகவே வான்மீகி முனிவரும் பெருமாளுடைய பரத்வவேஷத்தை ஸ்பஷ்டமாகக் கண்டவரென்று விளங்கும். ஆக இவ்வளவால் பெருமாளுடைய பரமஸ்பஷ்டத்வம் நிரூபிதமாயிற்று. ... ... ... *

**3.** துஷ்ட: — ஸந்துஷ்ட: என்றபடி. பெருமாளுடைய அவதாரத்தைப் பேசுகின்ற நம்மாழ்வார் * நாட்டில் பிறந்து படாதனபட்டு மனிசர்க்காய் * என்கிறார். "கர்மவச்யர்களான ஸம்ஸாரிகளும் படாதகஷ்டங்களை யெல்லாம்பட்டு" என்கிறார்கள் வியாக்யாதாக்கள். "துக்க ஸம்வேதநாயைவ ராமே சைதந்ய மாஹிதம்" [உத்தரராமசரிதே.] என்று பெருமாள் தாமே சொன்னதாக பவபூதிகவி யெழுதுகிறார். இவற்றால் பெருமாளுடைய திருவுள்ளம் ஸந்தோஷமற்றிருக்கும் போலுமென்று நினைக்க இடமுள்ளது. உண்மை அப்படியில்லை. ஸம்ஸாரிகளின் ஸமுஜ்ஜீவனார்த்தமாக வந்து அவதரிக்கப் பெற்றோமிறே யென்று திருவுள்ள முகந்தேயிருப்பர். முடி புனைந்து நாட்டையாளப் பாரித்திருக்கையில் சடை புனைந்து மரவுரியுடுத்துக் காட்டுக்குச் செல்ல நியமனம் பெற்றபோது எவ்வளவோ துக்கமாகத் தானே யிருந்திருக்குமென்று பலர் நினைக்கக்கூடும். அப்போதும் பரம ஸந்தோஷத்தையே யர்யிற்று பெருமாள் கொண்டது * ராஜ்யம் வா வநவாஸோ வா வநவாஸோ மஹோதய: " என்றவரன்றோ பெருமாள். இவ்விடத்தில் கம்பருடைய வாக்கு மிக வற்புதமானது. "இப்பொழு தெம்மனோரால் இயம்புதற்கௌிதோ? யாரும் செப்பருங் குணத்திராமன் திருமுகச் செவ்வி நோக்கின், ஒப்பதே முன்பு பின்பு வாசக முரைக்கக் கேட்ட, அப்பொழுதலர்ந்த செந்தாமரையினை வென்ற தம்மா." என்பது அவருடைய ஆச்சரியமான செய்யுள். வனவாஸக் கட்டளை பெறுவதற்கு முன்னே இராமபிரானுடைய திருமுகமண்டலம் தாமரை போன்றிருந்ததாம்; அக்கட்டளை பெற்றவாறே அத்திருமுகம் அப்போதலர்ந்த செந்தாமரையை வென்றிட்டதாம். கொடிய வனம் போக நேர்ந்ததே யென்று சிறிதும் சோகியாமல் புண்ணிய புனல்களாடவும் புண்ணிய புருஷர்களைத் தொழவும் வாய்ப்பு கிடைத்தமைக்குப் பரம ஸந்தோஷ மெய்தினனென்கை. ***உத்ஸவேஷு ச ஸர்வேஷு பிதேவ பரிதுஷ்யதி*** என்று பௌரஜனங்கள் நேரில் கண்டு சொன்னபடியே தனது நாட்டிலுள்ளவர்களுக்கு நேரும் ஸந்தோஷத்தைத் தன்னுடைய ஸந்தோஷமாகக்

கொண்டு மகிழ்பவன். "அபிஷிச்ய விபீஷணம் — விஜ்வர: ப்ரமுமோத ஹ" என்கிற படியே அன்பர்களை ஸந்தோஷப்படுத்தித் தான் ஸந்தோஷாதிசய மடைபவன்...*

4. புஷ்ட: = கீழே துஷ்ட: என்கிற திருநாமத்தினுல் சொன்ன ஸந்துஷ்டதையை நன்கு நிலைநாட்டுகின்றது இந்தத் திருநாமம். தான் அடையும் ஸந்தோஷம் வடிவிலே காணலாம்படி யிருப்பவன். 'உள்ளத்தின் மகிழ்ச்சி உடலிலே தெரியும்' என்பராதலால் ஹ்ருதயகதமான ஸந்தோஷத்தைத் திருமேனி கோட்சொல்லித் தரக்கடவதாயிருக்கும். வனவாஸக் கட்டளை ப்ராப்தமானது "வநவாஸோ மஹோதய:" என்று சொன்னது க்ருத்ரிமமென்று நினைக்கவொண்ணுதபடி திருமேனி புகர்த்துக் காட்டுமென்கை. வனவாஸம் ப்ராப்தமாவது பரம ஸந்தோஷத்திற்கே ஹேதுவென்று சொன்னதைச் சிறிது சோதிக்குமளவில் அது அஹ்ருதயோக்தியே யொழிய ஸஹ்ருதயோக்தி யன்றென்று அறுதியிடலாமா யிருக்கும். (எங்ஙனேயென்னில்) மேலே ஆரண்யகாண்டத்தில் ஸீதாவியோகம் நேர்ந்தபோது துக்கபரவசராய்க் கதறுகின்ற பெருமாள் *ராஜ்யாத் ப்ரம்சோ வநே வாஸோ நஷ்டா ஸீதா ஹதோ த்விஜ:, ஈத்ருசீயம் மமாலக்ஷ்மி: நிர்தஹேதபி பாவகம்.* என்று சொல்லிப் புலம்புகிருர். 'ஐயோ! ராஜ்யத்தை யிழந்தேனே! காட்டிலே வந்து வஸிக்கவும் நேர்ந்ததே!' என்று சொல்லுவது *வநவாஸோ மஹோதய:* என்றதற்கு நேர்முரணல்லவா? வனவாஸக்கட்டளை ஸந்தோஷகரமா யிருந்தால் 'ராஜ்யாத் ப்ரம்ச:' என்றும் 'வநேவாஸ:' என்றுஞ் சொல்ல வாயெழுமோ? ஈத்ருசீ இயம் மம அலக்ஷ்மீ:' என்று ராஜ்யப்ரம்ச வனவாஸங்களை தௌர்ப்பாக்யமாகவன்ரோசொல்லுகிருர். இவை பொருந்தும்படி எங்ஙனேயென்று விசிகித்ஸை பண்ணுவர்கள். இதற்கு நம்பிள்ளை யருளிச்செய்வது பாரீர்;

"*ராஜ்யநாசோபகர்ஷதி* வநவாஸோ மஹோதய:* என்று சொல்லிப் போந்தவற்றை இப்போது அனர்த்தமாகச் சொல்லுகிறதென்னென்னில், ஆச்ரித ஸம்ச்லேஷத்துக்கும் ரிஷிகளை நோக்குகைக்கு மென்றிறே போந்தது; அத்தோடே விரோதிக்கையாலே சொல்லுகிருர். பிராட்டியைப் பிரிகையாலும் பெரியவுடையாரை யிழக்கையாலும் இவற்றுக்கு அடியானவையும் இப்போது அனர்த்தமாகத் தோன்றினபடி."

என்பது நம்பிள்ளை ஸ்ரீஸூக்தி. (இதைச் சிறிது விவரிக்கிறேன்) வனத்திற்குப் புறப்படும்போது எதனுல் ஸந்தோஷமென்னில்; பிராட்டியோடு ஏகாந்தவாஸம் பண்ணப்பெறுவோம், பரமபாகவதர்களோடே ஸஹவாஸம் பண்ணப்பெறுவோம் என்றிங்கனே பாரித்ததனுல் ஸந்தோஷமுண்டாயிற்று, பாரித்தபடியே பேறு கிடைத்து வந்தது. *வைதேஹி! ரமஸே கச்சித் சித்ரகூடே மயா ஸஹ* என்று வாய்வெருவும்படி பிராட்டியோடே கூடியிருந்து குளிரப்பெற்றது *இஹ வத்ஸ்யாமி ஸௌமித்ரே! ஸார்த்தமேதேந பக்ஷிணா* என்று ஜடாயு மஹாராஜருடைய சிறகின் கீழே யொதுங்கி வர்த்திக்கவும் பெற்றது. இந்த நிலைமையில் "ஹா ஹந்த ஹந்த நலீநீம் கஜ உஜ்ஜஹார" என்னும்படியாகப் பிராட்டியைப் பிரியவும் ஜடாயுமஹாராஜரை அறவே யிழக்கவும் நேர்ந்தது. இந்த துக்கம் சொல்லுவித்த வார்த்தை

யன்றோ "ராஜ்யாத் ப்ரம்சோ வநே வாஸ:" என்பது. இதனால் காட்டுக்குப் புறப்படும்போதே ஸந்தோஷமில்லாமல் வருந்தியே புறப்பட்டதாக எண்ணத்தகுமோ? பரம குதூஹலத்தோடு மஹோத்ஸவம் ஸேவிக்கத் திருவேங்கடமலை சென்றவர் அங்கு இடமும் சோறும் தண்ணீரும் பெறாமல் அப்பன் ஸேவையும் பெறாமல் வெய்யிலிலும் மழையிலும் பரிதபித்துக் கிடக்க நேர்ந்ததென்று கொள்வோம்; அப்போது 'ஏதுக்கு வீட்டை விட்டு இங்கே வந்து வருந்துகிறோம்!' என்று தளர்ந்தால் இதனால் ஊரைவிட்டுப் புறப்படும்போதிருந்த குதூஹலத்தை இல்லை செய்யவொண்ணுமோ? இலங்கைசென்ற திருவடி அசோகவனத்தில் பிராட்டியைக் கண்டவாறே "அநயாஹி ந: ப்ரபு:, தாரயதி ஆத்மநோ தேஹம் ந சோகேந அவஸீததி" என்றுசொன்னது பெருமாளை கர்ஹிக்குமாபோலே யிருந்தாலும் (புஷ்ட:) என்னுமிந்தத் திருநாமத்தை வியாக்கியானம் பண்ணுமாபோலவே யிராநின்றது. 'வாடாமல் வதங்காமல் புஷ்டராகவே யிருக்கிறார் பெருமாள்' என்று காட்டினபடியாகக் கொள்ளலாம். இல்லையாகில் 'ஜீவதி' என்று மூன்றெழுத்தோடே முடிக்கலாமே; 'தாரயதி ஆத்மநோ தேஹம்' என்ற விசேஷ தேஹபுஷ்டியை அந்தரங்கமாகவே காட்டவேபோலும்....*

5. ஸுபேக்ஷண: = பெருமாளுடைய திருக்கண்ணழகிலே யீடுபட்டவர்கள் சக்ரவர்த்தியும் சபரியும் திருவடியுமாவர்கள். 'என் வேள்வியைக்காக்க உன் பிள்ளையைப் போரவிடாய்' என்று விச்வாமித்ர முனிவன் வேண்டினபோது *ஊநஷோடசவர்ஷோ மே ராமோ ராஜீவலோசந:* என்று விடையிறுத்த சக்ரவர்த்தியின் கருத்துகள் பலவுண்டு; அவற்றுள் ஒரு கருத்து – இக்கண்ணழகை விட்டுப்பிரிந்து எங்ஙனம் தரித்திருப்பேனென்கை; சபரி தன்னாச்ரமத்தேறப் போந்தபெருமாளைக் கண்டவாறே *சக்ஷுஷா தவ ஸௌம்யேந பூதாஸ்மி ரகுநந்தந!* என்று அவருடைய கண்ணழகிலே தான் ஈடுபட்டமையைத் தெரிவித்துக்கொண்டாள். இவற்றுக்கெல்லாம் மேம்பட்டது திருவடியின் வார்த்தை. அதாகிறது] ராம: கமலபத்ராக்ஷஸ் ஸர்வஸத்வமநோஹர: *] திருவடியோடு ஸம்பாஷணை செய்யும் பிராட்டி "யாநி ராமஸ்ய சிஹ்நாநி...தாநி பூயஸ் ஸமாசக்ஷ்வ ந மாம் சோக: ப்ரதக்ஷ்யதி" என்று பெருமாளுடைய அடையாளங்களைச் சொல்லும்படி கேட்டவாறே முந்துறமுன்னம் "ராம: கமல பத்ராக்ஷ:" என்றான். அக்கண்ணழகு செய்யுமது என்? என்ன; [ஸர்வஸத்வமநோஹர:] பிராணிகளென்று பேர்பெற்றாரெல்லாருடையவும் நெஞ்சைக் கொள்ளை கொள்ளுமதாயிற்று அவ்வழகு என்கிறார் திருவடி. இங்கே விமர்சிக்க வேணும்; திருவடி பெருமாளுடைய கண்ணழகை ஒரு பெரிய நகரத்திலே கண்டாரல்லர். நிர்ஜநமானதொரு வனத்திலே ஒரு மூலையிலே கண்டுவைத்து 'ஸர்வஸத்வமநோஹர:, என்று எதுகொண்டு சொல்லிற்றென்று ஆராயவேணும். இங்கு நம்பிள்ளை யருளிச் செய்வது, "திர்யக் ஜாதீயனைப் பணையோடு பணைதத்தித் திரிகிற என்னுடைய நெஞ்சையும் அபஹரித்ததே" என்று. இத்தால் பெருமாளுடைய கண்ணழகு ஸர்வஸத்வமநோஹரமென்னுமிடம் கைமுதிக ந்யாயஸித்தமென்கை இதைக்கணிசித்தே கம்பர், அனுமன் இராமபிரானைக் காணும்போதே "மஞ்செனத்திரண்ட கோலமேனியா!, மகளிர்க்கெல்லாம் நஞ்செனத் தகையவாகி நளிரிரும்பனிக்குத் தேம்பாக் கஞ்சமொத்தலர்ந்த கண்ணா!" என்று கூறினதாகப் பாடினர். (ஸுபேக்ஷண:) இதற்கு பாஷ்யமருளிச்செய்யாநின்ற பட்டர் "ஸ்வகர்த்ருகம் ஸ்வகர்மகஞ்ச

**தர்சநம் அதிரூபம் அஸ்ய** '' என்பதோர் அர்த்தமு மருளிச்செய்கிறார். இராமனைப் பிறர் காண்பதும் இனிது. இராமன் பிறரைக் காண்பதும் இனிது என்றதாயிற்று. ஈக்ஷண சப்தமானது கண் என்கிற பொருளையும், காண்கையென்கிற பொருளையும் காட்ட வல்லது. கண் என்கிற பொருளைக்கொண்டு கீழே விவரணம் செய்தேன். இப்போது காண்கையென்கிற பொருள்கொண்டு விவரிக்கிறேன். [***யச் ச ராமம் ந பச்யேத் து யஞ்ச ராமோ ந பச்யதி நிந்தித: ஸ பவேல்லோகே ஸ்வாத்மாப்யேநம் விகர்ஹதே***] (ஸ்ரீ ரா. அயோ. 17 – 14) இராமனைக் காணுதவனும் இராமனால் காணப்படாதவனும் உலகில் நிந்திக்கப்பட்டவனாவன்; உலகத்தார் நிந்திப்பது கிடக்கட்டும்; தன்னைத்தானே நிந்தித்துக்கொள்ளவேண்டியதுமாகும் என்றபடி. இதனால் இராமனைக் காண்பதுபோல இராமனால் காணப்பெறுவதும் புருஷார்த்தமென்று தேறுவதால் **ஸுபேக்ஷண:** என்பதற்கு இருவகைப் பொருளையும் பட்டர் திருவுள்ளம் பற்றினது சாலச் சிறக்கும். இந்த சுபேக்ஷண மஹார்த்த ப்ரஸ்தாவத்தில், அசோகவனத்தில் புலம்பாநின்ற பிராட்டி '' **தம் பத்மதளபத்ராக்ஷம்** ஸிம்ஹ விக்ராந்த காமிநம். தந்யா பச்யந்தி மே நாதம் க்ருதஜ்ஞம் ப்ரியவாதிநம் '' என்று சொன்ன விந்த சுலோகமும் சிந்தை செய்யத்தக்கது. இதில் **பத்மதளபத்ராக்ஷ** மென்றுள்ளது. இங்கு பத்மதளமென்றே பத்மபத்ரமென்றே ஒன்று சொன்னால் போதும்; '' பத்ரம் பலாசம் ச்சதனம் தளம் பர்ணம் ச்சத: புமாந் '' என்ற அமரகோசத்தின்படி தளம் பத்ரம் என்பன பர்யாயமேயாதலால் **தளபத்ராக்ஷ** மென்று இரண்டையும் கூட்டிச் சொன்னது புநருக்தமாகாதோவென்று சிலர் சங்கிப்பதுண்டு சங்கை யுக்தமானதே. இங்குப் பெரியார் கூறும் ஸமாதானம் சுவைமிக்கது. வடமொழியில் அக்ஷமென்கிற சொல்லுக்கு '' அக்ஷமிந்த்ரிய காயயோ: '' என்கிற நிகண்டின்படி கண்ணென்றும் வடிவென்றும் இருபொருள்களுள்ளமை ப்ரஸித்தம். இரட்டுறமொழிதலென்னும் தமிழ் மரியாதையினால் **பத்மதளபத்ராக்ஷ** மென்றவிவ்விடத்தில் அக்ஷபதத்திற்கு இவ்விரண்டு பொருள்களையுங் கொண்டு 'பத்மதளம் போன்று விசாலமான கண்ணழகுடையவர், பத்மபத்ரம் போன்ற [தாமரையிலை போல் பசுமையுள்ள] திருமேனியையுடையவரென்றதாகக் கொள்ளக்கடவது. நம்மாழ்வார் திருவாய்மொழியில் * செக்கமலத்தலர்போலுங் கண்கைகால் செங்கனிவாய், அக்கமலத்திலை போலுந் திருமேனி * என்றருளிச்செய்தது மேலேவிவரித்த பொருளைத் திருவுள்ளம் பற்றியே.

**6. ராம:** — 'ரமதே' இதி ராம: ரமு-க்ரீடாயாம் என்று தாதுவாகையாலே விளையாடுபவன் என்று பொருள்படும். '' த்வம் ந்யஞ்சத்பிருதஞ்சத்பி: கர்மஸூத்ரோபபாதிதை: ஹரே! விஹரஸி க்ரீடாகந்துகைரிவ ஜந்துபி: '' என்று நாரத முனிவர் கூறினபடியே, சிறுவர்கள் பந்துகளைக்கொண்டு விளையாடுமாபோலே எம்பெருமான் பிராணிகளை வைத்துக்கொண்டு விளையாடுகிறான். பந்தானது வெளுப்பு நூல் கருப்புநூல் சிவப்பு நூலாகிய மூன்றுநிற நூல்களாலே கட்டப்பட்டிருப்பது போல பிராணிகளும் ஸத்வரஜஸ்தமஸ்ஸுக்களாகிற மூன்று நிறமுள்ள, குணங்களமைந்திருப்பர்கள். பந்தானது விஹாரகாலத்தில் மேலே போவதும் கீழே விழுவதுமாயிருப்பது போல, பிராணிகளும் '' தே தம் புக்த்வா ஸ்வர்க்க லோகம் விசாலம் க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விசந்தி '' என்கிறபடியே மேலே போவதும் கீழே

